A BIWEEKLY YOUTH NEWSPAPER CIRCULATING THE GTA

TOTAMIL.COM

# TO தமிழ்



TORONTO TAMIL BASKETBALL ASSOCIATION FOR DETAILS SEE PAGE 27



WED FEBRUARY 01 2006
VOLUME 1, NUMBER 11



## வழி மறந்து வாழும் பெற்றோர்கள்...
## வழி தேடி செல்லும் பிள்ளைகள்...



STAND BY OUR ROOTS - CONTINUE OUR LEGACY

**Director**
Deba Christy

**Chief-Editors**
Akil
Inez

**Editorial Team**
Jaimi Alexander
IneZ Indrakumaran
Anjali Akil
Consalas-Jude
Thusha Tharmalingam
Selvan Balasingam
Salini Francis-Xavier

**Layout & Design**
MediaVibez inc.

**Ads Design**
Selvan Balasingam

**Marketing & Advertising Director**
Amal
Selvan Balasingam

**Distribution coordinator**
Richman

**Web Design**
Sri
Maji
Rajieive

**Website:**
www.totamil.com

**Email:**
info@totamil.com
ads@totamil.com
edit@totamil.com

**Office:**
1468 Victoria Park Ave., Suite 113
Toronto, ON
M6A -2M2

**Advertising Inquiries**
(416) 751-5990

**Fax:**
416 751 7084



We at TO Tamil are very interested in hearing from fellow journalists and in receiving articles, reviews, and opinion pieces from readers. So please, if you have something you want to say and would like to see published - don't be shy – send it to edit@totamil.com.

## கடிதம்

வணக்கம்!

மீண்டும் ஒரு பொதுநலப் பார்வையுடன் உங்கள் கைகளில் வந்துள்ளோம்!

பெற்றோர்கள் பார்வையில் பிள்ளைகள்
பிள்ளைகளின் பார்வையில் பெற்றோர்கள்

இந்த இரண்டுபேர் மனதிலும் எலும் கருத்துக்கள் கவலைகள் பொதுநலக் கண்ணோட்டங்கள்

இந்தக்காலத்திற்கு ஏற்றமாதிரி தன்னை மாற்றி இயற்கையோடு போட்டி போட்டுக் கொண்டு பிள்ளைகளும்

அந்தக்கால நினைப்புடன் அவர்கள் வாழ்ந்த முறையை சொல்லிக் காட்டி அந்த நினைவிலேயே வாழத்துடிக்கும் பெற்றோர்கள்

அந்தக்காலத்தையும் இந்தக்காலத்தையும் - அறிந்து அதன் வளர்ச்சியை உணர்ந்து

பிள்ளைபளுடன் நட்புடனும் நம்பிக்கையுடனும் பழகும் இன்னெரு வகை பெற்றோர்கள்!

தங்களின் பெற்றோர்களின் வசதி அறிந்து வாழ்கைமுறை அறிந்து அவர்களோடு தோழ்சாய்ந்து இன்னொரு வகை பிள்ளைகள்!

உங்கள் பிள்ளைகள் மீது நம்பிக்கை வையுங்கள். அரைவனைத்து அறிவுறை கூறுங்கள் - அவர்கள் அன்புக்கு அடிபணிவார்கள்!



அன்சலி அகில்

## eDITORIAL

"Family faces are magic mirrors. Looking at people who belong to us, we see the past, present, and future." As Tamils in Canada we have one thing in common, we have escaped from a war in Sri Lanka in search of a better home for the upbringing of a new generation. It is not only the Tamil community, but all immigrants in Canada struggle to keep their identity and fear that their children will not remember their ancestors. However, parents are very much caught up in enforcing rules that their parents had forced upon them in Sri Lanka that they fail to realize that time has passed. Gone are the times when a child's fear of a parent was the ultimate sign of progress and discipline. Gone are the times in when it was believed that a parent was the 'all-knowing' individual. In this time and age it is expected of parents to build a healthy relationship with their children. Similarly, it is required of children to be patient and understanding of their parents. While a lot of teenagers feel that their parents are inexperienced of the social conditions of this country, parents have more knowledge and wisdom than they are credited for. Fortunately, there are parents who hold a stable friendship with their children and likewise there are children who cherish the Tamil tradition while adjusting to the Canadian society. Therefore both parents and children have to make sacrifices and adjustments in order to understand one another. The first step toward a better understanding is communication. In fact, many families deteriorate due to lack of communication. The advice that our parents give their children is based on experience and knowledge. Parents should be patient because their children may seem to ignore their advice but eventually the children will come to accept it. AS the famous quote goes; "sound really does travel slower than light. The advice parents give to their 18-year-old doesn't reach them until they're about 40."

Inez

# குடும்ப வாள்வில் பேற்றோரும் பிள்ளைகளும்

குடும்பம் ஒரு கோயில் அதில் அன்பே தினம் வாழும். குடும்பத்தின் அச்சாணி நம்பிக்கை. குடும்பத்தில் பெற்றோர், பிள்ளைகள் என வாழும் நாம் அவரவர் தம் கடமைகளை சரிவர செய்கின்றோமா? பெற்றோராகிய நாம் பிள்ளைகள் மட்டில் அன்பும், அக்கறையும் உள்ளவர்களா? பிள்ளைகள் மட்டில் முழு அக்கறை கொண்டு அவர்கள் வாழ்வை வளம்பெற செய்ய நம்மை அர்ப்பணிக்கின்றோமா? பிள்ளைகள் தம் பெற்றோர் மட்டில் மதிப்பும் மரியாதையும் கீழ்ப்படிவும் உள்ளவர்களாக வாழ்கின்றார்களா? அவர்கள் இன்ப, துன்ப, இன்னல் உடல் நலத்தில் அக்கறை கொண்டுள்ளார்களா? என்ற இக் கேள்விகளுக்கு கனடா நாட்டில் வாழும் சில பெற்றோர் பதில் எப்படி?

பல சமய மொழிகளின் கூற்றுப்படி ?உன் தந்தை தந்த பயிற்சியை கடைப்பிடி உன் தாய் கற்பித்ததை தள்ளி விடாதே?

?அவை தலைக்கு மணிமுடி உன் கழுத்துக்கு மணிமாலை?

இதற்கிணங்க பிள்ளைகளை கண்டித்து திருத்தி கண்ணியமாக அன்பான அரவணைப்பால், சினேகிதராக அணுகுவதுதான் சாலச்சிறந்தது. கடும் சொற்களாலும், அதிகாரம் கொண்ட செயலாலும், நாம் பிள்ளைகளை நல்வழிப்படுத்த முடியாது. எல்லா சுதந்திரமும் கொண்ட இந்நாட்டில் நாம் வன்முறை மூலம் பிள்ளைகளை வளர்க்க முற்பட்டால் பிளவுதான் ஏற்படும்.

பிள்ளைகளுக்கு எரிச்சல் ஊட்டி, மனம் தளர செய்யக்கூடாது. பிள்ளைகளை முறையான அணுகுமுறையோடு அன்புடன் கலந்த தண்டனைதான் மிகச் சிறந்தது. தீயவனை நல்லவனாக்குவதும், நல்லவனை தீயவனாக்குவதும் பெற்றோரில்தான் தங்கி உள்ளது.

குழந்தை தாயின் வயிற்றில் இருந்து உதிக்கும் போது அந்த பிஞ்சு உள்ளத்தில் எந்த விதமான கலப்படமும் இருக்காது. பின் அது தன் தாயின் அன்பிலும், அரவணைப்பிலும், தந்தையின் பாதுகாப்பிலும் வளர்க்கப்படுகின்றது. அயல் சூழல் அதை அலங்காரப்படுத்தும், அல்லது அழிவுப் பாதைக்கு இட்டுச்செல்லும். ஒரு குடும்பம் தம் பிள்ளைகளும் தலைமுறையினரும் செழிப்புடன் திகழவும் சொத்து, செல்வம், பொன், பொருள் மட்டும் போதாது. கணவன், மனைவி இருவருள் இருக்கும் அன்பு, சமாதானம், மகிழ்ச்சி, புரிந்துணர்வு, மன்னித்தல், ஏற்றுக்கொள்ளல் என்பவற்றோடு உண்மை, நேர்மை, இறைபக்தி உள்ளவர்களாக இருக்கும் போது இது நல்வாழ்வு மட்டுமல்ல நம் அயலாரையும் வாழவைக்கும். நம் பிள்ளைகளையும் நல்லவர்களாக வளர்க்க வேண்டும். பகைமை, வைராக்கியம், துரோகங்களை மறந்து வாழும் போது தான் நம் பிள்ளைகளும் எதிர்காலத்தில் சிறந்த மக்களாக வாழ நாம் வழிகோல முடியும்.

நம் பிள்ளைகளை ஆரம்ப கல்விக்கு விடப்படும் போதே அவர்களை மிக மிக கண்ணியமான முறையில் கண்காணிக்கப்பட வேண்டும். ஆரம்பத்தில் அவர்கள் பாடசாலை வாழ்க்கை, வெளி வாழ்க்கைகளை கவனிக்க படாதிருப்பதால்தான் சில பிள்ளைகள் தீய வழிகளுக்கு ஆளாகுவார்கள். பெற்றோரின் கவனக் குறைவும், வேலைப்பழுக்கமும் வு.ஏ போன்ற தொலைக்காட்சிகள், தனிமைகளும் பிள்ளைகளை தவறான வழிக்கு செல்வதற்கு காரணியாகின்றன. பெற்றோர் இருவரும் ஒரே நேரத்தில் வேலைக்கு செல்லாது, இரு பகுதியாக பணிபுரிந்தால் பிள்ளைகளை சிறந்த முறையில் நடத்த ஏதுவாய் இருக்கும்.

பெற்றோரின் பாசம் சிறு வயதினருக்கு மட்டுமல்ல, இளைஞர், யுவதிகளுக்கும் அவசியம் தேவை. அவர்கள் மனதில் உள்ள இன்ப, துன்ப அபிலாஷைகளை பகிர்ந்து கொள்ள பெற்றோர் பங்கு நிச்சயம் வேண்டும். தமிழ் மக்களாகிய நம் அனைவர் இல்லங்களிலும் வேலை சென்று வந்ததும் கணவன், மனைவிக்கிடையே பல, பல கோணங்களில் சச்சரவு சண்டைகள். சில குடும்பங்களில் பணப் பிரச்சினை மூலம் மற்றவர்களுக்கு உதவி செய்வதால் ஏற்படும் தீராத சண்டை. வாக்குவாதம் இவற்றை எல்லாம் பார்த்திருக்கும் சிறு பிள்ளைகள் மட்டில் விரக்தி. பெற்றோர் மட்டில் வெறுப்பு, வளர வளர வேறு பாதைகளில் அவர்கள் ஆட்கொள்ளப்படுகின்றார்கள். வளர்ந்தோர் வீட்டில் இருக்க முடியாது தவறான இடங்களில் சென்று மது, போதைவஸ்து, புகைத்தல் இன்னும் பல கெட்ட வழிகளில் தவறி பின அது அடிக்கடி சண்டைகளாக கொலை முயற்சிகலும் ஆளாக்கப்படுகின்றார்கள். சிறு வயதிலே கல்வியை இழந்து விடுகின்றார்கள். பிள்ளைகள் பிழை விடும் அருணங்களில் அவர்களை திருத்தி நல்முறைபடுத்த நிச்சயம் பெற்றோரால் முடியும். பெற்றோர் பிள்ளைகளை தண்டித்து நல்ல முறையில் வளர்க்காவிட்டால் அவர்கள் அன்பில்லாதவர்கள் என்பதுதான். பெற்றோர் தான் எண்ணியதைதான் பிள்ளைகள் செய்ய வேண்டும், பெற்றோரின் கட்டுப்பாட்டில் பிள்ளை வளர்க்கப்பட வேண்டும் என்று முரண்பாடான கருத்து வேறுபாடுகளால் உந்தப்பட்டவர்களாய் இளைய தலைமுறையினரின் அபிலாஷைகளை எதிர்த்து நிற்பதால் பிள்ளைகள், பெற்றோர் மட்டில் இடைவெளி வெகுவாக அதிகரிக்கின்றது. பழையகால பழக்க வளக்கங்கள் வழிமுறைகளை தாமும் பின்பற்றி தம் பிள்ளைகளையும் இட்டுச் செல்லப் பார்ப்பதினால் சில பிள்ளைகள் பெற்றோரை விட்டு விலகி தவறான தீய பழக்க வழக்கங்களுக்கு ஆளாக்கப்பட்டு சிலவேளைகளில் தான் எண்ணிய வாழ்க்கையின் சீரழிக்கபடுகின்றார்கள். இவற்றிற்கெல்லாம் முக்கிய காரணிகள் பெற்றோரின் அணுகுமுறைகள்தான். ஆகையால் பிள்ளைகளே! பெற்றோரில் குறைகளை கூறிவிட்டு உங்கள் வாழ்க்கையை நீங்கள் சீரழிக்காதீர்கள். பெற்றோரை வழிநடத்துவதும் உங்கள் கையில். குழந்தாய் உன் தந்தையின் முதுமையில் அவருக்கு உதவு அவர் உள்ளத்தை புண்படுத்தாதே. உன் தாயின் அன்பிற்கும் அரவணைப்பிற்கும் ஈடேது.

இந்த கனடா நாட்டில் வாழும் எத்தனை இளைஞர் யுவதிகள் தங்கள் கல்வியை தொடர்ந்து கற்காது பாதியிலே விட்டு படுகுழியில் வீழ்கின்றார்கள். காலம் போனாலும் பின்னும் தொடரக்கூடிய கல்வி வளத்தை இந்தநாடு தந்திருக்கின்றது. எத்தனை இன்னல்கள், சோதனைகள் இருந்துபோதும் மன உறுதியுடன், நம்பிக்கை உள்ளவர்களாக நீங்கள் உங்கள் கல்வியை தொடருங்கள். கல்வியை கற்பவன் பெற்றோரை மதிக்க தெரிந்தவனாய் இருப்பான். புண்பட்ட வாழ்வை பண்பட்ட மகிழ்வாக்கும் செல்வங்களில் மிக உன்னதமானதும் உப்பரிகை மிக்கதும் கல்விச் செல்வமே. கல்விக்கு நிறம் இல்லை அது நீளமானது, கல்விக்கு சாதி இல்லை.

கல்விக்கு மணம் இல்லை, அது மானம் காப்பது. கல்விக்கு ஆசை இல்லை அது அலங்காரமானது. எத்தனை விடயங்களை தேடினாலும் தீய சக்திகளை உங்கள் உள்ளங்களிலிருந்து வேரோடு பிடுங்கி எறிந்து விட்டு நல் மக்களாய் வாழுங்கள். மனித வாழ்வில் இழப்புக்கள் பல கோணங்களில் , பல உருவங்களில் அனைவரையும் சந்திக்கின்றன. திடீர் மரணம், அடிதடி நிகழும் இயற்கை. செயற்கை மரண அனர்த்தம் விபத்து மரணம் இதை மனிதன் ஓரளவு ஏற்றுக் கொள்கிறான். ஆனால் சமூக விரோத கொலைகளால் மனிதன் நிலைகுலைந்து தடுமாறி தத்தளிக்கின்றான். எங்கள் மத்தியில் அன்பு கொண்ட எத்தனை நெஞ்சங்களை பறிகொடுத்து பதிதவிக்கின்றோம். இப்படிப்பட்ட கொடூர சம்பவங்களில் இருந்து விடுபடவே பிள்ளைகளை பெற்றவர்கள் படும் துயர் தான் எத்தனை, எத்தனை. பாலூட்டி சீராட்டி தன் நெஞ்சமதில் அணைகடந்த கனவுகளுடனும் கற்பனைகளுடனும் வாழ்ந்து வரும் பெற்றோர். ஆனால் பெற்றோரின் கவனக்குறைவுதான் பிள்ளைகளை தகுந்த முறையில் தக்க தருணத்தில் கண்காணிக்காது விட்டதினால் இன்று எம் இளைஞர் மத்தியில் அவலங்கள் அதிகரிக்கின்றது. பெற்றோர் படும் வேதனை, துயரம், இழப்பு எப்படித்தான் சொல்வது. ஒரு தாய் படும் கஸ்டம் மறு தாய்க்குத்தான் தெரியும். தன் மகன், மகள் பல கஸ்டங்களில் இருந்து விடுவட்டுவிட்டாள் என்ற நம்பிக்கையுடனும், அபிலாஷைகளுடனும் இக்கனடா நாட்டிற்கு அனுப்பிவிட்டு அவனின் உதவிகளையும் அன்பினையும் எதிர்பார்த்திருக்கும் பெற்றோர் அவன் கொலை செய்யப்பட்டுவிட்டான் என்றறிந்ததும் அவர்கள் நிலை எப்படி இருக்கும். நம் நாட்டில் இளைஞர், யுவதிகள் படும் அவலங்கள் எத்தனை நிம்மதியான தூக்கம் இல்லை. நேரத்துக்கு உணவுமில்லை, நிரந்தர கல்வி இல்லை மனதில் நிம்மதி இழந்து நாளுக்கு நாள் உறவுகளை இழந்து தவிக்கும் நம் இளைய சமுதாயத்திற்காக இரத்தக் கண்ணீர் விடும் பெற்றோருக்காக போர் சூழலால் இருளாக்கப்பட்டிருக்கும் நம் நாட்டிற்காக தாய் மண்ணிற்காக.

கனடா வாழ் பெற்றோரும், பிள்ளைகளும் முன்மாதிரியாக நடந்து அவர்கள் தேவைகளில் பங்கெடுத்து தம் வாழ்வையும் பெற்றோருடன் இணைந்து புதிய வாழ்வு பெறவும் இந்த ஆண்டிலே நல்லதொரு இளைய சமுதாயம் என்ற நற்பெயருடன் வாழ்வதே சாலச்சிறந்தது.

# அழியாத கோலங்கள்...

வழி மறந்து வாழும் பெற்றோர்கள். வழி தேடி செல்லும் பிள்ளைகள். இதில் யாரை குற்றம் சொல்வது? எந்த குழந்தையும் நல்ல குழந்தைதான். பெற்றோர்களும் நல்லவர்கள்தான். இதில் நல்லவர்கள் கெட்டவர்கள் என்று யாரை சொல்வது? சந்தர்ப்பம் சூழ்நிலைதான் நம்மை மாற்றுகிறது. ஆம் அந்த சூழ்நிலையை நாம் தேடி போகின்றோம் அது நம்மை தேடி வருவதில்லை. அன்புக்கும் பண்புக்கும் உரித்தானவர்களே நீங்கள் உங்கள் பிள்ளைகளிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? படிக்க வேண்டும், பட்டம் பெற வேண்டும் உங்கள் பெயர் சொல்ல வாழவேண்டும். அது ஓர் சாதாரண விஷயம். அது உங்கள் கையில்தான் இருக்கின்றது, அந்த ஆர்வம் நியாயமானது. ஆனால் உங்கள் பிள்ளைகள் உங்கள் இடத்தில் எதிர்பார்ப்பது? அன்பான அப்பா, அம்மா. எத்தனை பெற்றோர்கள் உங்கள் பிள்ளைகளின் எதிர்காலத்தை எண்ணிப் பார்த்திருக்கிறார்கள்?

எதிர்காலம் என்பது அவர்கள் உள்ளத்தில் துளிர்விடும் எண்ணங்கள். எத்தனை பெற்றோர்கள் அந்த எண்ணத்தை மதித்திருப்பீர்கள்? அவர்களை அவர்கள் போக்கில் போகவிடாது நீங்கள் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அவர்களின் ஆசா பாசங்கள் எல்லாத்தையும் மண்ணோடு மண்ணாக புதைக்கின்றார்கள். அவர்கள் எண்ணம் மட்டும் புதைக்க படவில்லை. அவர்கள் வளர்ச்சியும் புதைக்கப்படுகின்றன. அப்படி புதைக்கப்படும் போதுதான் அவர்கள் வழிதவறி போகின்றார்கள். ஆம் பெற்றோர்களே நாம் இரத்தம் சிந்தி வேலை செய்வது வங்கியில் பணம் சேர்ப்பது அவர்களை நல்வழிப்படுத்தாது மற்றவர்களுக்காய் வாழ்வதை விட்டு உங்கள் பிள்ளைகளுக்காய் அவர்களின் எண்ணங்களை மதித்தவர்களாய் வாழ வேண்டும் அப்பொழுதுதான் உங்கள் ஆசைகள் மதிக்கப்படும். உங்கள் எண்ணம் நிறைவேறும். பெற்றோர்களே சிந்தியுங்கள். செயற்படுங்கள். நாம் சொந்த மண்ணை விட்டு வேறு இனத்தவர்களின் மண்ணில் வாழ்கின்றோம் நீங்கள் வாழ்ந்த சமுதாயம் உங்களது. நாம் வாழும் சமுதாயம் வேறு. இந்த சமுதாயத்திற்கு ஏற்றவாறு நாம் வாழவேண்டும். இல்லாவிட்டால் நாம் புறக்கணிக்கப்படுவோம். அதற்காக நாம் வழிதவறிப் போக மாட்டோம். நாம் உங்கள் பிள்ளைகள். தாயில் சிறந்த கோயிலும் இல்லை, தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்று திருவாய் மலர்ந்தார்.

பெற்றோர்களே பகட்டான வாழ்க்கையை தேடி அலையாதீர்கள். உங்களை நீங்களே அழித்து விடுவீர்கள். உங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் அழிந்துவிடும். உங்கள் நிகழ்காலம்தான் பிள்ளைகளின் எதிர்காலம். நீங்கள் வழிதவறிப் போனால் அவர்கள் வழி மறந்துவிடுவார்கள். பெற்றோர்களே நீங்கள் படும் கஷ்டம் உங்கள் பிள்ளைகள் படவேண்டுமா? அது உங்களோடு நிற்கட்டும். சிந்தித்து பாருங்கள் நீங்கள் கஸ்ரப்படுவது எதற்காக? உங்கள் பிள்ளைகளின் எதிர்காலம் நல்லாக இருக்க வேண்டும் என்றுதானே. நான் சொல்ல வந்தது எது என்று தெரிந்து இருக்கும். நீங்கள் எதிர்பார்ப்பது போல் உங்கள் பிள்ளைகளும் எதிர்பார்ப்பார்கள். இதை புரிந்து கொண்டால் பிள்ளைகளின் எதிர்காலம் நன்றாக அமையும். உணர்ச்சிகளை மதிப்போம் உணர்வோடு வாழ்வோம்.

-என்றும் உங்கள் நண்பன்.

**Consalas-Jude**

அழியாத கோலங்கள்...

# They look to you for protection.

**You can look to us for financial protection.** Critical illness insurance can help protect your finances if a critical illness strikes. Giving you peace of mind so you can concentrate on the important things.



*Chandran Rasalingam*
*Bus 416 412-0401 ext 305*
*Cell 416 909-0400*
*Fax 416 412-1438*

*2075 Kennedy Road*
*Scarborough ON M1T 3V3*
*www.clarica.com/gnanachandran.rasalingam*



CLARICA

*Investment and insurance solutions - since 1870*

# Why Men Have It So Easy

I can come home anytime I want, sometimes I don't come home at all, I can go topless in the summer, I do not PMS every month for 7 days of every year until I'm 50, I have 5 minutes of pleasure and voila! a baby is born, my laundry is done for me, my bed is made for me, meals are cooked and served on a plate for me, my biggest dilemma in life is which club to hit with my boys. Who am I?.....You guessed it – A MAN!

Men – not only from the Tamil community, but from all cultures, races and color - have it easy. Obviously they won't agree with this comment, nor this entire article for that matter, but that is yet another one of their much-loved qualities – they just won't admit the truth. Men are seen as the 'head' (more accurately referred to as 'hard-headed') of the family, but the days where the men bring home the money and the women stay at home to cook and clean are long over. Now, they are more like the tail of the family. These days, women are smart enough (in most cases much smarter than men) to earn almost as much if not more than their male companions. But their capabilities are not recognized nor applied. Sure, these days society is improving and some things are viewed equally among men and women. For example, the bills are split 50/50, however, the house chores are not. What's even more disappointing is that even second-generation immigrants who grew up in western society and are highly educated adopt this way of thinking and adhere to this lifestyle. There are still many young, educated Tamil men out there who raise their hands to their wife/girlfriend to shut her up during an argument. And there are still many young, educated Tamil women out there who stand there and take it. Why does this cycle of life still continue among Tamils even in an evolved country like Canada? Why are women so under-developed? Why are women still the weaker sex? What is it about the Tamil culture that blindly advocates the superiority of men and inferiority of women? – The root cause of this is the upbringing of our parents. Women are raised to be passive and men are raised to be aggressive. Unfortunately this is what our parents were taught back home by their parents, and they are now passing it on to us. Men are the strong protectors and money-making machines, while women are the weak baby-making machines. This way of life worked well in Sri Lanka, but it is just not acceptable today in a country like Canada. How many of us have heard of a Tamil woman coming home after work, sitting down and putting her feet up while her husband hurries to bring her a nice hot cup of tea? – None.

It is our parents who instill in us the notion that girls must come home before dark. It is our parents who tell us to stay at home and learn how to cook. It is our parents who teach us that boys can go out and have fun, but girls can't. What they don't realize is that this over protectiveness is what causes girls to lie about having 'computer classes' or 'study sessions at a friend's house' or 'night class'. The main reason parents suppress their daughters is that they are worried about what 'people would think'. It would ruin their daughter's reputation and her market for marriage will go down if the neighbours saw her coming home late. When will Tamil parents finally say 'who cares what others think?'. When will they finally realize that there's no harm in having a little bit of fun once in a while? (with limits of course). When will they learn that cooking and cleaning shouldn't be a girl's only extra-curricular activity? When will they realize that life is too short to be living according to other people's expectations?

Parents also attribute their strict upbringing to the fact that girls can come home pregnant while guys can't. They think shielding their daughters from the world by keeping them locked up at home will prevent them from going out and getting a boyfriend. And if their innocent little daughter goes out and gets one nevertheless, then it just has to be her friends' fault. A child's choice of friends have very little to do with the way they turn out. If kids get enough support and intellectual guidance from home, why would they turn to their friends for direction? If young teenage girls acquire self-confidence and emotional strength, they would know better than to allow negative influences to overcome them. They would be able to decipher right from wrong and make valid, practical judgments, instead of allowing others to make their decisions for them.

What a lot of Tamil parents fail to realize is that it is better to be their children's friends first, then their parents. They should encourage their daughters to be strong and dependent, and not to settle down as a housewife. Many Tamil women are lost when their husbands are not around. Many of them (including myself) would burst into tears if they were left in the middle of an unknown street to find their own way home. They need to get up and maintain a social life and awareness outside of the four walls of their kitchen. By being too sheltered and hidden from the real world, women remain in the dark about many things. Parents should allow their daughters to go away from home for university. Allow them to go on vacations. Allow them to get a job. Allow them to experience what's out there; the good as well as the bad. That is the only way they will grow into mature, intelligent, street – as well as book – smart young women who do not have to live in the shadow of their men.

Thusha Tarmalingam

# THE TRIALS & TRIBULATIONS OF PARENTING IN CANADA

Immigrating to a new country and establishing a life here is hard enough. But when it comes to changing parenting in order to adapt to Canada, many people experience difficulty. Tamil youth are the immediate result of the parenting they receive. So where is the balance between traditional and modern parenting? While many believe they should stick with tradition, it is best to figure out what is more appropriate for your teen.

While tradition is good, it separates youth from others. Whether it be dating, curfews, or even friends in general, youth seem to be alienated from others when representing their culture to an extreme. But they will also be alienated from family and (cultural) social events if they are brought up in a westernized fashion.

Fashion is a major issue between mothers and daughters in Canada. While parents may fantasize about their young ones going to school in braids and garlands of flowers, it is not a reality. It should be acceptable to wear western clothing in a western school. But just because a teenager can wear western clothing doesn't mean they can completely rid themselves of their culture and wear miniskirts and belly tops out in the open. It should be known in a household, what kind of rules there are about clothing.

Dating is a humongous problem in many households, despite a parent's lack of knowledge. While other cultures may allow their children to date freely, apparently the Tamil culture doesn't. So many children date without the parent's approval or knowledge for that matter. Why constrict youth so that they must lie to their parents? Teens need to feel that they may be open to their parents, whatever the subject may be. So discuss the issue as a family, and come up with solutions and compromises that satisfy both the teen and parents.

Parents believe that the only parties are family parties. But friends have a new importance in Canada, and most teens consider their friends a high priority. This becomes a conflict when social outings come into play. While it is necessary to spend time with family, many also consider their friends as family. Parents need to understand that outings with friends isn't as dangerous as it seems to be. "Chilling" is not slang for doing drugs. Parents have the ability to learn more about their child's friends and see for themselves, whether they make a good impact on their child or not. Therefore taking the time to learn about your teen and their friends would make letting them out for social gatherings less of a burden.

While there are many more issues that youth and their respective parents have to deal with, they all have one resolution. Communication can work wonders, and improves the relationship between generations. Whatever the problem may be, whether it be clothes, friends, or dating, talking things out and discussions can be the ultimate solution to the battle of the cultures.

Akalya Atputharajah






In a Canadian society, the Tamil community is struggling to adapt to the westernized culture. We the youth tend to rebel against our parents, because of the need to adapt and change to fit in with the society we live in. However, we cannot blame the parents, they are only trying to keep their tradition and culture alive. One of the biggest problems that the youth of our society face revolves around school most of the time, where around six hours of the day is spent.

Most of our parents do not realize the peer pressure that we go through at school. It is as if they still think that we are back home. If we were to get a 97% average, the typical Tamil parent would grate us about the other 3%. Parents should realize that there is no ranking system in Canada. In our native country, everything was based on the ranking system. Not only that, but even if one were to get a good average it wasn't enough, due to the financial status. Us the youth do realize that our parents are only asking us for the other 3% because they want a better future for us. When they see us, they think of the future, hoping that we will eventually become; doctors, engineers, lawyers and such.

It is so typical for Tamil youth from our society to go into one of the mentioned fields. However, in the westernized country that we live in, there is space for so much more. We could become artists, musicians, social workers, etc. Since our parents are used to the idea of giving birth to; doctors, engineers, and lawyers making enough money to live, the thought of one going into the arts, or humanities is shocking to them. But what should shock them even more is that we are capable of going through school life with all of the peer pressure around us. Not all parents are like this however, because many of them have realized the opportunities that Canada has to offer us.

Living in Canada has opened our mind to many different ways of surviving. Some of us in the youth community consider our social engagements a higher priority than our career. All of us realize though that we have to take the chances that we get, and make our parents proud. If our parents knew, then some things might change.

Thulasi Manoharalingam

# பேற்றோர்களும் பிள்ளைகளும்??..

## கனடிய இலங்கைத் தமிழர்களாகிய எங்கள் குடும்பத்தில் உள்ள உறவு முறையில் ஓர் கண்ணோட்டம்??..

மாதா, பிதா, குரு, தெய்வம் என்று முதன்மைப்படுத்தப்பட்ட உறவுகளில் தாய், தந்தை உறவு போற்றுதற்குரியதாகும். ?அன்னையும் பிதாவும் முன்னறி செய்வம்? என்று சான்றோர்கள் கூறியுள்ளார்கள். உறவுகளில் பெற்றோர்களின் உறவே மேன்மையானதாக எக்காலத்திலும் சித்திரிக்கப்படுகின்றது. மனிதர்கள் மட்டுமன்றி எல்லாவிதமான உயிரினங்களும் அவ்வாறான ஒரு பந்தத்திற்குள் ஆட்படுத்தப் பட்டிருப்பதை நாங்கள் சற்று சிந்தித்தால் அவதானிக்கக் கூடியதாக இருக்கும். இந்த உன்னதமான உறவுமுறையில் மனிதனின் உறவுமுறையைப் பார்ப்போமாயின் பெற்றோரிற்கும் பிள்ளைகளிற்கும் உள்ள உறவுமுறை மற்றும் பிள்ளைகளை வளர்க்கும் முறை போன்றவற்றில் பல வேறுபாடுகள் இருப்பதை நாம் பலவிதமான காரணிகளில் கவனிக்கக் கூடியதாக இருக்கும். ஒவ்வொரு நாடுகளிற்கிடையிலும், நகரங்களிற்கிடையிலும், சமூகங்களிற்கிடையிலும் ஏன் வீட்டிற்கு வீடே வளர்ப்பு முறையில் வித்தியாசப்படுவதை அவதானிக்கக் கூடியதாக உள்ளது.



தமிழர்களாகிய எங்கள் சமுதாயத்தில் பிள்ளைகளை வளர்க்கும் முறையில் உள்ள வேறுபாடுகள் உறவுமுறையில் உள்ள பிரச்சினைகள், பிரச்சினைகளை தோற்றுவிக்கும் காரணிகள் போன்ற சில விடயங்களை ஒப்பீட்டளவில் இலங்கையிலும் வெளிநாடுகளிலும் எவ்வாறு வேறுபடுகின்றது என்பதுபற்றி சற்று அலசுவோம். இப்படியான ஒரு கண்ணோட்டம் ஏன் பரிணாமங்கள், திணிக்கப்பட்ட புதிய வாழ்க்கை முறை (வெளிநாடு) இப்படியாக பல காரணிகள் உறவுமுறையில் மாற்றங்களை உருவாக்கியிருக்கின்றன.

பொதுவாகவே தமிழர்களாகிய எங்கள் குழந்தைகள் வளரும் முறை மற்றைய சமூகங்களிலிருந்து சற்றே வேறுபட்டாற் போல இருக்கின்றது. வேறுபாடு என்பது அன்பில் ஒரு மாற்றத்தையும் காட்டவில்லை. பாசத்தையும் அன்பையும் காட்டுவதில் அதிலும் பிள்ளைகளில் அன்பைப் பொழிவதில் வேறு இனத்தவரை விட எவ்விதத்திலும் எமது இனத்தவர் குறைந்தவர்களில்லை. சில வேளைகளில் அன்பும் பாசமும் நிஜச்சூழலை மறைத்து விடுகின்றது. அளவிற்கு அதிகமான கட்டுப்பாடற்ற பாசத்தினால் பிள்ளைகளை வளர்க்கும் முறையில் உள்ள அடிப்படை அத்திவாரத்தில் ஈடாட்டத்தைக் கொண்டு வந்துவிடுகின்றார்கள். இவ்வகையான தவறுகளை உணர்வதற்கு அவர்களிற்கு குறைந்தது பதினாறு வருடங்களாவது பிடிக்கின்றது.

இவ்வகையான தவறிற்குரிய காரணங்கள் யாவை? புலம்பெயர்ந்து கண்டம் விட்டு கண்டம் வந்து வித்தியாசமான ஒரு நாடு, சமூகம், மொழி, கலாச்சாரம், இனவேறுபாடு, வாழ்க்கைமுறை மற்றும் நாகரிக மாற்றங்கள் இவர்களை சற்றே தடுமாற வைத்துவிடுகின்றது. அவ்வகையான தடுமாற்றத்திற்கு கொடுக்கப்படும் பரிசுகள்தான் இவ்வகையான பிரச்சினைகளின் மூல காரணிகள்.

பொதுவாகவே குழந்தைகள் கண்ணாடியைப் போன்றவர்கள். அவதானமாக அவர்கள் கையாளப்படல் வேண்டும். அவ்வாறு கையாளப்படும் பிள்ளைகள் மிகவும் துலக்கமானவர்களாக இருப்பார்கள். சற்றே பெற்றோர்களின் கவனம் கலைக்கப்படின் அவர்கள் சுக்குநூறாக்கப்படுவார்கள். குழந்தைகளின் உள்வாங்கலும் பிரதிபலிப்பும் பெற்றோர்கள் எவ்வாறு இருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தே பொதுவாக அமையும். பிள்ளைகள் தங்கள் சுற்றுப்புறச சூழலில் இருந்தே பலதையும் கற்றுக் கொள்கிறார்கள். அவர்களின் பார்வையில் தெரிவதை அப்படியே உள்வாங்கி வெளிக்காட்டுகிறார்கள். பெற்றோர்கள் காட்டும் அதீத அன்பை சில குழந்தைகள் சுயநலமாக பயன்படுத்துவதை நாம் அவதானிக்கக்கூடியதாக இருக்கும். அவ்வகையான செயற்பாடு பழை என்று குழந்தைக்கு தெரியாது. எனினும் அதன் உள்நோக்கத்தை எம்மால் புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கும். உதாரணமாக தாம் அழுதால் பெற்றோர்கள் இரங்குவார்கள் என்று தெரிந்த குழந்தைகள் அழுதே தமக்குத் தேவையான காரியங்களை சாதித்துவிடுகின்றன. கட்டுப்பாடற்ற ஒருவிதமான அன்பு பிள்ளைகளை குழப்பமான நிலைக்கு இட்டுச் சென்றுவிடும். எங்கள் சமூகத்தில் குழந்தைகள் குறைந்தது பத்து வயது வரையாவது பெற்றோர்களுடன்தான் உறங்குகிறார்கள். இது ஓர் தவறான செயற்பாடாகும். சுழந்தைகளின் மனவியல் வளர்ச்சியில் ஒரு குழப்பமான நிலையை அடைய நேரிடும். குழந்தைகள் சிறுவயதிலிருந்தே தனிப்படுக்கையில் உறங்கப் பழக்கப்படுத்தப்பட வேண்டும். இவ்வகையான பழக்கம் ஆரம்பத்தில் கடினமாயினும் காலப்போக்கில் பிள்ளைகள் அனாவசியமான காரணங்களிற்கு மன உளைச்சல் அடையமாட்டார்கள். ஆழ்ந்த உறக்கத்தைப் பெற்று புத்துணர்வாக இருப்பார்கள்.

பொதுவாகவே பிள்ளைகள் பருவ வயதை அடையும்போது அவர்களுடன் மிகவும் அவதானமாக பழகி அவர்களை தோழமை உணர்வுடன் அணுக வேண்டும். பருவ வயதும், விடலைப் பருவமும் மிகவும் குழப்பமான சிந்தனையையும் வெளிப்பாடுகளையும் கொண்ட பருவமாகவே பொதுவாக அமையும். ?ஓமோன்? சுரப்பிகள் உடல் வளர்ச்சியில் ஏற்படுத்தும் பாரிய மாற்றங்களால் இவ்வயதில் அவர்கள் மனங்களும் குழப்பமான ஒரு தோழமை உணர்வுடன் பழக வேண்டும். இரண்டும் கெட்டான் என்று கூறுவது இவ்வயதைத்தான். இவ்வயதினரை ஈர்ப்பது கவர்ச்சியும், வெளித்தோற்றமும் மட்டுமே. சரி, பிழை எது என்பதை கணிக்கும் நிலையில் இல்லாத ஒரு பக்குவம்.



தமிழ் சமூகமாகிய எங்கள் குழந்தைகளின் பருவ மற்றும் விடலைப் பருவத்தினரின் நிலை கனடா நாட்டில் எவ்வாறு உள்ளது. அவர்களின் உறவு பெற்றோர்களிடம் எவ்வாறு உள்ளது என்பதை சற்று அலசுவோம். இளம் பருவத்தினராகிய எங்கள் சமூகத்தின் குழந்தைகளின் வீட்டு வாழ்க்கையும் வெளியுலக வாழ்க்கையும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டதாகவே இருக்கின்றது. வீட்டில் வளரும் போதுஅவர்கள் ஒரு இலங்கை தமிழர்களாகவும் வெளியுலகில் கனடியர்களாகவும் இரு முகங்களைக் கொண்டு வாழ்கிறார்கள். இவ்வகையான இருசமகோட்டு வாழ்க்கை பருவ வயதுக் குழந்தைகளை குழப்பத்தில் தள்ளுகின்றது. இவர்கள் பெரும்பாலும் வெளியுலக வாழ்க்கையாகிய கனடிய வாழ்க்கையைத்தான் தெரிவு செய்கிறார்கள். அந்த முயற்சியில் தங்கள் பெற்றோர்களுடன் முரண்படுகிறார்கள். இவ்வகையான குழந்தைகளின் நிலை இருக்கின்றது.

10ஆம் பக்கம்

# பேற்றோர்களும் பிள்ளைகளும்??..

2ஆம் பக்கத்தொடர்....

கனடிய தமிழ் பெற்றோர்களையும் அவர்களின் குழந்தைகளிற்கு இடையேயான உறவு முறையையும் சற்றுப் பார்ப்போம். இந்த உறவு முறையில் கூடுதலாக பெற்றோர்கள் மிகவும் குழப்பமான நிலையில் உள்ளார்கள். கூடுதலான பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை வளர்ப்பதற்கு இலங்கையில் குழந்தைகளை வளர்க்கும் முறையையே கையாளுகின்றார்கள். இங்கே தான் பிரச்சினையே உருவாகுகின்றது. பெற்றோர்கள் பிள்ளைகளை தங்கள் ஆதிக்கத்திலேயே வைத்திருக்க நினைக்கிறார்கள். தாங்கள் நினைப்பது போல் பிள்ளையின் செயற்பாடு இல்லாதவிடத்து அவர்கள் பிள்ளைகளின் மேல் கடினத்தை பாவிக்கிறார்கள். முற்று முழுதாக இப்படித்தான் நடக்கிறது என்றும் கூறமுடியாது. பெற்றோர்கள் பிள்ளைகளிடத்து நம்பிக்கை வைக்க வேண்டும். இல்லாவிடில் அவர்கள் பிள்ளைகளின் ஒவ்வொரு செயற்பாட்டிலும் பிழையையே காண்பார்கள். தாங்கள் சிறுவயதில் எப்படி வளர்ந்தோம் என்று ஒப்பிட்டுப் பார்த்துக் குழப்பிவிடுவார்கள். தாங்கள் இந்த நிலையை அடைவதற்கு செய்த தியாகங்கள், பட்ட கஷ்டங்களை பிள்ளைகள் மேல் திணிக்க முற்படுவார்கள். பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை தங்கள் கண்களினூடாக (பார்வை) பார்க்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். இது நம்பிக்கையீனத்தையே கொடுக்கின்றது. நான் (பெற்றோர்) அந்த வயதில் எப்படி இருந்தேன் அதே போல் என் பிள்ளையும் அந்த வயதில் இருப்பான் என்றோ அல்லது தனக்கு கிடைத்த ஒரு கண்டிப்பான கட்டுப்பாட்டு வாழ்க்கைதான். தன் குழந்தைக்கும் உதவும் என்ற பக்குவப்படாத எண்ணம் (இடம், காலம், மாற்றம் என்பவற்றை உணராத தன்மை) இப்படியான கருத்துக்கள் பிள்ளைகளிற்கும் பெற்றோர்களிற்கும் இடையில் உள்ள ஒரு ஒவ்வாத தன்மையைக் கொடுக்கின்றது. இது முற்று முழுதாக ஒரு பிழையான செயற்பாடாகும். பிள்ளைகளை வளர்ப்பது நல்ல நிலைக்கு கொண்டுவருவது தியாகம் அல்ல. அது பெற்றவர்களின் கடமை. பெற்றவர்கள் பல விடயங்களில் பிள்ளைகளின் பார்வையில் பார்ப்பதே நன்மை பயக்கும். அப்போதுதான் அவர்களின் பிரச்சினைகளை இனங்கண்டு அதிலிருந்து அவர்கள் மீள்வதற்கு உதவி செய்யலாம். கல்வி முதல் வெளியுலக பிரச்சினைவரை இளம் வயதினரை தோழமையுணர்வுடன் அணுகும் பட்சத்தில் அவர்களை மேம்பட்டவர்களாக்கலாம். ?அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு? என்பது போல் அளவுக்கு மீறிய கண்டிப்பும், கரிசனையும், அறிவுரையும் அவர்களை மேலும் பிரச்சினைகளிற்குள்ளேயே அமிழ்த்திவிடும். சிறு வயதில் குழந்தைகளிற்கு குரங்கும் தொப்பிக்காரனும் கதையை கூறியிருப்போம். அதேபோல் தான் பெற்றோரும் பல சமயங்களில் தொப்பிக்காரனைப் போல் சமயோசிதமாக நடக்க வேண்டும்.

பெற்றோரிற்கும் பிள்ளைகளிற்கும் இடையில் உள்ள உறவு வித்தியாசப் படுவதையும் அதன் காரணங்களையும் ஆரம்பத்தில் பார்த்தோம். சமூக காரணிகள், குடும்ப அந்தஸ்து மற்றும் பெற்றோர்களின் கல்வியறிவும் இதற்கு காரணமாக இருப்பதையும் அவதானிக்கலாம். நாட்டுக்கு நாடு பிள்ளைகளிற்கும் பெற்றோர்களிற்கும் உள்ள உறவு முறை மேலும் வளர்ப்பு முறை பெரிதும் வேறுபடுவதை கண்டோம். இலங்கையில் பிள்ளைகளை வளர்க்கும் முறையில் சில கடினங்கள் இருப்பதை அவதானிக்க வேண்டும். இலங்கை கலாச்சாரமும் வாழ்க்கை முறையும் கனடாவில் இருந்து வேறுபடுகின்றது. கனடாவில் பெரிதும் ஓர் கட்டுக்கோப்பான அரச அமைப்பும் நிர்வாக அமைப்பும் இருப்பதை அவதானிக்கலாம். ஆனால் இலங்கையில் அப்படியானதொரு கட்டுக்கோப்பான அமைப்பு இல்லையென்றே கூறலாம். இவ்வகையான காரணிகள் கூட பிள்ளைகளை அடித்து வளர்ப்பதற்கு ஏதுவாக இருக்கின்றது. அடித்து வளர்ப்பது போல பாடசாலைகளில் ஆசிரியர்கள் அடித்துப் படிப்பிப்பது என்பனவெல்லாம் அடித்தல் என்பது ஒரு கலாச்சாரம் போல் ஒரு தோற்றத்தைக் காட்டுகின்றது. இதன் பலாபலன்களையும் நன்மை தீமையையும் சரிபிழையென்று நூறு விகிதம் கூறுவது ஒரு கடினமான முடிவாக இருக்கும். ஒப்பீட்டளவில் பார்த்து நன்மைகளைத் தரும் நடைமுறைகளைப் பின்பற்றுவதே சாலச்சிறந்தது.

?நல்லதோர் வீணை செய்து அதை நலம்கெட புழுதியில் எறிவதுண்டோ சொல்லடி சிவசக்தி????.?

சிந்திப்போம், செயற்படுவோம், உறவுப்பாலத்தை உரமாக்குவோம்.

என்றென்றும் உங்கள் நண்பன்

இவன்

வதிரியான்

# THE EVOLUTION OF SINGLE PARENTS IN THE TAMIL COMMUNITY

Parenthood is another stage in life that most of us will endure at some point or another. It makes us grow up and take responsibility, as well as allowing us to witness a real miracle that is your very own flesh and blood which you created, with love.

Although parenthood does offer a lot of perks, it's hard not to let the stress and chaos get to you. As if parenthood isn't difficult enough, the reality of single parents is even more complex to bear. Having two parents was considered normal; the nuclear family consisted of a mother, a father and their children. But the days of the nuclear family have declined and we have now been adapted to single parent families that are often struggling to raise their children while being judged by the rest of the world. As a result, the product of a single parent family has gotten negative feelings, often stereotyping the children as drop-outs, troubled, and confused about their own goals in life. Families with single parents have evolved slowly past these stereotypes in the Canadian society, but with much hard work. Now it's not frowned upon when a child tells their friend that they live with just mommy and daddy is someone who barely comes around. Mothers of a single parent household aren't always looked at with labels such as whore, or failure running through people's minds. This is due to single mothers taking control of their lives, learning to survive successfully as well as raise their children on a single income, with little or no help from what is popularly known as the baby's daddy.

Unfortunately the same cannot be said about the Tamil society. Even though we are Tamils residing in Canada, the stereotype is harsher on single parents. The actuality of single parent families is that the parent is often the mother. It's seldom that the father is the one taking care of his children, unless the separation is due to a divorce or death in which case the father is often re-married. The same cannot be said for single Tamil mothers. If a single mother has been divorced then the assumption is that she might be a drama queen, because a man can never leave a proper lady and so re-marriage can only be an option but with minimal choices as to who she can re-marry (the usual prospects are much older men and attraction or love is not even taken into account). If her husband has died than re-marriage is a possibility but that depends entirely on age as well as wealth. But through it all, the chance of creating a new life for a Tamil woman is rare compared to that of a Tamil man. This is because the gender separation has still not left the Tamil ideology. Due to this, the children of a single mother family are also condemned because of the choices of the mother. As a mother, the choice is naturally to prioritize the children and so the mother often sacrifices her own ambitions or expectations in order to provide her children with a bright future. These choices though are seen as unacceptable according to our cultural standards because a woman must seek some sort of protection from a man, be it her father, brother or husband. But why is there no faith that a Tamil woman IS capable of raising a family, of providing for her children, of being able to protect herself and live a successful life on her own?

As a community, we should be able to support the mothers that have taken the responsibility of their family upon themselves because it is revolutionary that Tamil woman have the resources available to them in Canada to do so. It is quite overwhelming as it is, but with the entire community only watching closely for failure only makes the rocky road further difficult. The idea of a family being incomplete without both parents has been vanquished because it has been proven that a single parent can successfully raise their children, and implement morals and beliefs that will lead them in a positive route. Being raised by a single mother myself, I testify that I would not be the independent, successful woman I am today without seeing her being able to overcome the obstacles on her own. By seeing your own parent battle life solely, the child can only hope to prevent their parent from never enduring anymore pain than they already have, making that child stronger, wiser and determined towards success, just to make that parent smile because their effort and sacrifices have not gone to waste.

Jaimi Alexander

# Plea of a Son ...

This interview took place in jail between a TO Tamil journalist and a 22-year-old convicted male. He was born in Sri Lanka and immigrated to Canada at the age of nine. He completed elementary school and failed to graduate from secondary school. The individual that we have interview wishes to remain anonymous and TO Tamil respects the privacy of the young man and his family. In relation to this issue we have appropriately decided to call him "son".

TO Tamil: Can you provide details of your crime and conviction?
Son: Murder. I am expected to serve 25 years in jail. I've served two years.

TO Tamil: Can you explain your childhood?
Son: I think I had a good childhood. I remember that when we first came to Canada, my parents were struggling. My father started working in a factory and my mother became a self-employed seamstress. She made sari blouses for people in our Tamil community. Obviously their income was not enough to feed and clothe four children but our parents never complained. At night we hear them arguing, this used to scare me. Now I realize that they were only taking out their frustrations on one another.

## "I tried to but they didn't care to listen. They didn't believe me."

TO Tamil: As a nine-year-old boy, how would you describe your mother and father?
Son: [Silent for a couple of minutes]. Busy. I saw my mother in the mornings and when I came home after school, she would be locked up in her room trying to finish her sewing. Sometimes I would hear the sewing machine all through the night, it puts me to sleep. [Pauses] My father, I never saw him. He was always at work. He had to make enough money for us and for his siblings in Sri Lanka.

TO Tamil: What is your favourite memory of your parents?
Son: [Shakes his head and smiles]. Probably my 11th birthday. For the first time, we went out as a family. I had asked my parents to take us to a restaurant and my father took a day off work to spend the day with us.

TO Tamil: Do you have a least favourite memory with your parents?
Son: [Sarcastically] My all-time least favourite memory would have to be when my parents didn't realize that my younger brother was very sick. My mother finally decided to take him to the doctor and the doctor said that he was suffering from some sort of lung disease. My little brother died when he was 8 years old.

TO Tamil: I'm sorry to hear that. Do you blame them for your brother's death?
Son: I don't blame them, I'm just angry with them. I remember that my parents thought it was only a very bad cough. My mother did give him all the homemade remedies. The only reason she didn't take him to the doctor was because she didn't believe in giving him so many different medications such as anti-biotic and cough syrups. Do you have any other questions?

TO Tamil: At what age did you start getting in trouble with the law?
Son: This is the kind of question I expected. Well, when I was fifteen I was arrested for possession of a weapon. I brought a knife to school to threaten a kid.

TO Tamil: Did you parents find out about that?
Son: Yeah. They went crazy because I was expelled from school. They asked my relatives for help but our relatives only made things worse by gossiping about my family. Since that day, my parents have been ashamed of me. After that, I continuously got in trouble at school for one reason or another.

TO Tamil: Did your parents ever talk to you about your behaviour?
Son: [Laughs]. Yeah, they tried. They told me that I was a disgrace to the family. My parents asked me to stay away from criminal activity at least until my older sister (who was nineteen at the time) gets married. They said that if she did not get a marriage proposal, it would be my fault. They also reminded me that all of our relatives were talking about me and calling me a criminal.

TO Tamil: If they had treated you differently or talked to you compassionately, would you have changed?
Son: I don't know. I'm not blaming my parents for the way I turned out. I know the rest of the world probably blames them but I don't. I think they did the best they could. I just wish that they had explained to me of the difficulty that they were facing at the time. I didn't know that my grandmother was sick in Sri Lanka and my father was sending money for her. I didn't know that the war in Sri Lanka was a burden on my parents. I think as a fifteen year-old kid, I would have understood their worries. Maybe then, I would have turned out differently.

TO Tamil: How did your parents discipline you?
Son: Well, my father hit me a couple of times. My mother tried to defend me. This was the routine for the first couple of times I got in trouble. By the time I turned 18 my father lost his job and I never saw him as much, he was out working at different places everyday. I got a job at a grocery store and tried to help them out. [Sits silently for a couple of minutes]. My father never accepted my money though. He heard from people that I was involved in fraud and theft. I was arrested for getting into fights but never for fraud or theft. My friends were involved in that stuff but not me.

TO Tamil: So why didn't you explain that to your parents?
Son: I tried to but they didn't care to listen. They didn't believe me.

TO Tamil: Since the day you stepped into this jail how many times did your parents visit you?
Son: My mother comes down often. Now that my sister is married, my brother-in-law drives her here to see me. My father only comes for my birthday.

TO Tamil: If you could tell your parents one thing what would it be?
Son: To have faith in their children. Children make mistakes and so do parents. I have forgiven them for all the mistakes they've made and I ask them to forgive me.

